# ராமையா

சூரியாஸ்தமன சமயம். கதிரவனின் கிரணங்கள் மேற்கு வானத்தைத் தங்க மயமாக இழைத்து விட்டன. அந்த ஒளி வீட்டின் மீதும் வீசி, எல்லாவற்றையும் இரத்தின மயமாகப் பிரகாசிக்கச் செய்தது. தூரத்தில் ஒரு சிற்றாற்றின் சலசலப்பு காதில் இன்பகரமாக ஒலித்துக் கொண்டிருந்தது. அந்தத் தேஜோமயத்தில் ஆழ்ந்து நான் சந்தோஷத்தின் உச்சத்தை அடைந்தேன். மனது நிர்மலமாய், நிஷ்களங்கமாய் அன்று மலர்ந்த தாமரையைப் போல் விரிந்து நன்றியுடன் ஈசுவரனைத் தியானித்தது. ஆம்; அந்தச் சமயத்தில் நாம் கடவுளுக்கு எவ்வளவு அருகில் இருக்கிறோம் என்பதை உணர்ந்தேன்.

மரங்களில், வீடு திரும்பியப் பறவைகள் ஆனந்த அரவம் செய்தன. செடிகளில் பல வர்ணப் பட்டுப் பூச்சிகள் பூக்களுடன் கொஞ்சின. கதைகளில் படிக்கும் வனதேவதையென நான் விளங்கினேன்.

குழந்தை மாது என் முன் மணல் வீடு கட்டி விளையாடினான். சட்டென்று நிமிர்ந்து நோக்கி, "அம்மா!" என்று அவன் என்னிடம் ஓடி வந்தான். கொஞ்ச நேரம் என் மடியில் சாய்ந்து கொண்டு வானத்தையும் தன்னைச் சுற்றியிருக்கும் இயற்கை அழகையும் ஆழ்ந்து கவனித் தான். அவன் தனது சிறு கண்களைச் சுளுக்கிக் கொண்டு கவனிக்கும் போது நான், அவனது சிந்தனையைக் கலைக்க விரும்பாது, மெல்ல அவன் தலையை வருவடியவாறு உட்கார்ந்திருந்தேன். அவன் என்னைப் பார்த்துக் கூறினான்:

"அம்மா, நீ கதை சொல்லுவாயே- ஒரு ராஜா தொட்ட தெல்லாம் பொன்னாகி விட்டது என்று. அது போல இருக்கிறதம்மா இப்போ. தங்க அம்மா, தங்க வீடு, தங்க மாது, தங்க... எல்லாம்!"

அவன் குரல் கம்மி, ஒன்றுமில்லாத ஓசையாய் காற்றுடன் கலந்தது. நானும் மெய்ம்மறந்து உட்கார்ந் திருந்தேன். குழந்தையின் மனதில் பதிந்து கிடக்கும் கவியுள்ளம் ஒரு கணம் அவனது வாயின் மூலம் காட்சியளித்தது. அதைக் கண்டு அதிசயத்தவாறு பேச்சற்றிருந்தேன் நான்.

'டப்' என்ற பெரிய ஓசை என்னை அந்த மாயா லோகத்திலிருந்து இந்த உலகத்திற்கு இழுத்து வந்தது. நான் எழுந்தேன். பூனையோ, நாயோ என்று உள்ளே ஓடினேன். அதற்குள் 'மட, மட' வென்றும், 'கண, கண' வென்றும் வெண்கலப் பாத்திரங்கள் உருளுவது கேட்டது. நான் சமையலறைப் பக்கம் செல்லு வதற்குள் ஒரு நாய்

வாயில் ஒரு தோசையைக் கவ்விக் கொண்டு வேகமாக வெளியே ஓடிற்று.

தினந்தோறும் இதே தொல்லை தான். ஒரு நிமிஷம் கதவை மூட மறந்தால் போயிற்று- பூனையும் நாயும், காக்கையும், குருவியும் சர்வ சகஜமாக உள்ளே நுழைந்து வெகு சுவாதீனத்துடன் எல்லாவற்றையும் திறந்து, கொட்டி, தங்களுக்கு வேண்டிய பண்டங்களை எடுத்துக் கொண்டு ஓடும். மறுபடியும் சரியாக எல்லாவற்றையும் எடுத்து வைப்பதற்குள் என் பொறுமையும் அவைகளுடன் பறந்து ஓடிவிடும்.

கதவைச் சாதித்திக் கொண்டு வெளியே வந்தேன். இன்னும் அவர் வரவில்லையே? கையெழுத்து மறையும் நேரமாகி விட்டது. இருட்டினால் எனக்கு பயமாக இருக்கும். எங்கள் வீடு இருக்குமிடம் ஒரு பொட்டல் காடு என்றே சொல்லலாம். அங்கே எங்கள் வீட்டைத் தவிர இன்னும் சில வீடுகளே இருந்தன. நாங்கள் இந்த சிறிய வீட்டைக் கட்டி இரண்டு வருடங்கள் ஆகின்றன.இன்னும் சுற்றி வேலிப் போடவில்லை. என் கணவருக்கு இருபது மைலுகப்பாலுள்ள நகரத்தில் வேலை. அங்கே ஜன நெருக்கடியில் இருப்பதைக் காட்டிலும் நித்தமும் ரயில் பிரயாணம் செய்வதே மேல் என்று அவர் கருதினார். மாலை அவர் வரும் ரயில் எங்கள் வீட்டிலிருந்து ஒரு மைலுக்கு அப்பாலுள்ள ஸ்டேஷனுக்கு வர மணி ஆறேகால் ஆகிவிடும். நானும் மாதுவும் அவர் வரும் வரை வாசலில் உட்கார்ந்து அவரை எதிர்பார்த்துக் கொண்டிருப்போம்.

"அம்மா!" என்று கூப்பிட்டான் மாது.

"என்னடா?"

"இங்கே ஒரு தாத்தா வந்திருக்கிறார், அம்மா."

"தாத்தாவா? இங்கே யார் வருகிறார்கள்!" என்று ஆச்ரியத்துடன் நான் வெளியே சென்று பார்த்தேன். வாசலில் ஒரு வயோதிகர், குழந்தை விளையாடுவதைப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தார். இந்தக் காலத்தில் யாரை நம்புவது? நான் ஒன்றும் கூறாமல் ஏதோ வேலை யாக உள்ளே சென்று விட்டேன்.

"யாரது?"

ஆம், என் கணவரின் குரல் தான். நான் ஆவலுடன் அவரை எதிர்கொண்டு அழைக்கச் சென்றேன். அவர் அந்தக் கிழவனை நோக்கியவாறு நின்று கொண்டிருந்தார்.

"உனக்கு என்னப்பா வேண்டும்?" என்று கேட்டார் அவர்.

"உங்களுக்கு உதவிக்கு ஆள் வேண்டுமா?"

என் புருஷன் சற்றுத் தயங்கினார். அந்தக் கிழவனின் குரல் கணீரென்று, காதில் வெகு நேரம் அதிர்ச்சி உண்டாக்கும் வகையைச் செய்தது. வயது ஐம்பது இருக்கும். உடம்பு கோடிட்டு சுருங்கி காலதேவன் மனித ரூபம் எடுத்து வந்தாற் போலிருந்தது. நான் என் கணவருக்கு என்னால் முடிந்த வரையில் ஜாடை காண்பித்துப் பார்த்தேன். அவர் என்னை கவனிக்கவே இல்லை.

"சரி, இரு பார்ப்போம்" என்றார் அவர் அந்தக் கிழவனிடம்.

எனக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. இவர் இப்படித்தான் எப்பொழுதும் யாரையும் நம்பி விடுவார். பிறகு இவர் ஆபீஸுக்குப் போய் விட்டால் நான் தானே

அவனுடன் வீட்டில் தனியாக இருக்க வேண்டும்! நான் அவர் உள்ளே வந்ததும் அவரைக் கடிந்தேன். ஆனால் அவர் சிரித்தார். "நீ இங்கே தனியாக இருப்பதற்கு ஒரு துணையாயிற்று" என்றார். இவர் இப்படிப் பேசத் தொடங்கினால் என் ஜம்பம் ஒன்றும் சாயாது என்று நெடுநாள் பழக்கத்தில் எனக்குத் தெரிந்த விஷயம்தான். அவருக்கு நான் சொல்லுவது புரியாமலில்லை. புரிந்து கொள்ள மறுப்பவர்களிடம் என்ன செய்வது? மேலெழுந்த கோபத்தை அடக்கிக் கொண்டு நான் 'விர்' ரென்று உள்ளே சென்று விட்டேன்.

சிறிது நேரத்துக்கெல்லாம மறுமுறை அந்தக் கிழவனைப் பார்ப்போம் என்று வாசற் பக்கம் சென்றேன். அவனை அங்கே காணோம். என் மனம் ஏனோ நிம்மதி யடைய வில்லை. வழக்கம் போல் செடிகளுக்குத் தண்ணீர் விடுவதற்காக பின்புறம் சென்றேன். அங்கே அவன் எனக்கு முன்னேயே ஜலம் இழுத்துக் கொட்டும் வேலை யில் முனைந்திருந்தான். நான் அதிருப்தியுடன் என் முகத்தைச் சுளுக்கிக் கொண்டு உள்ளே சென்று விட்டேன்.

என் கணவர் சமையலறைக்கு வந்தார். "ராமய்யா எங்கே சாப்பிடுவான்? பாவம், அவனுக்கும் சேர்த்து சாதம் வடித்து விடு" என்றார்.

"ஆகா!" என்றேன், நான் எரிச்சலுடன்.

☆ ☆ ☆

**நா**ங்கள் சாப்பிட்டுவிட்டோம். தினந்தோறும் நான்தான் கதவுகளைத் தாளிடுவேன். பின்புறம் சென்று குடம், செம்பு முதலியவைகளை எடுத்து வரச் சென்றேன். அங்கே யாரோ உட்கார்ந்திருப்பது என் கண்ணில் பட்டது. திடுக்கிட்டு 'ஓ' வென்று கூச்சலிட்டு விட்டேன். அவர் ஓடி வந்தார்.

"ஒன்று மில்லை, நான் இங்கு இருப்பதைப் பார்த்து பயந்துக் கொண்டு விட்டார்கள்" என்று அந்தக் கிழவன் அவருக்குச் சமாதானம் கூறினான். அப்பொழுதுதான் எனக்கு அவன் ஞாபகம் வந்தது. நான் சமாளித்துக் கொண்டு உள்ளே சென்றேன். அவன் சாப்பிடாததும் கவனம் வரவே, அவர் கவனிக்கு முன் சாதத்தைக் கொண்டு அவனுக்குப் போட்டேன். அவன் சாப்பிட்டு முடியும் வரையில் தூக்கத்தை எதிர்த்துக் கொண்டு அங்கே உட்கார்ந்திருப்பது மிகவும் கஷ்டமாக இருந்தது- உள்ளூர அந்தக் கிழவனைச் சபித்துக் கொண்டிருந்தேன்.

அவனை நம்பி வீட்டையும் பாத்திரங்களையும் விட்டு விடுவதா!

அவனும் எழுந்தான். நான் கதவைத் தாளிட்டுக் கொண்டு படுக்கச் சென்றேன்.

* * *

அலட்சியமாக மலைகளையும் மரங்களையும் உதைத்துக் கொண்டு மேலெழும் பகலவனால் தழுவப்படும் உதய வானம் பெரிய நகரமே பற்றி எரிவது போலெல்லாம் ஜாலம் புரிந்தது. நான் பலகணியைத் திறந்து சோம்பல் முறித்தவாறு அக்காட்சியை அநுபவித்துக் கொண்டிருந் தேன். சூரியன் விளையாட்டுப் பிரியன் போலும். என் முகத்தையும் சிவக்க அடித்து விட்டான். எனக்கு வட நாட்டு 'ஹோலி பண்டிகை' ஞாபகம் வந்தது. கதிரவனைக் கண்டு ஒரு சிரிப்பு சிரித்து விட்டு, வாயில் ஒரு பாட்டை முனகியவாறு மாட்டுக் கொட்டிலை நோக்கிப் பின்புறம் சென்றேன்.

நான், நிகழும் விடியற் காலையில் எழுந்து, பத்துப் பாத்திரங்களைத் தேய்த்து விட்டு, குளித்து, எட்டு

மணிக்குள் என் கணவருக்குச் சமைத்தாக வேண்டும். ‘மாட்டை வெளியே கட்டிவிட்டு, வாசலுக்குத் தெளிக்க சாணம் திரட்டி, இன்னும் வீட்டைப் பெருக்கி...’ என்ன ஆச்சரியம், மாடு மரத்தடியில் கட்டியிருந்தது. கொட்டிலி னின்றும் சாணம் எல்லாம் எடுக்கப்பட்டு தரை சுத்தமாக அலம்பப்பட்டிருந்தது. ‘உம்’ மனத்திற்குள் வியந்தவாறே வாசற் பக்கம் சென்றேன். அங்கேயும் சாணம் தெளித்து பெருக்கியிருந்தது! என் இரு உதடுகளும் இறுகிக் கொண்டன. ‘அந்தக் கிழவன்... என்ன தைரியம் அவனுக்கு! தானே எஜமானன் என்று எண்ணம் போலும்.’ அவனைத்தேடிச் சென்றேன். எங்கும் காணவில்லை. ‘வரட்டும்...’ என்று மனதிற்குள்ளேயே கறுவியவாறு மற்ற வேலைகளைக் கவனிக்கலானேன்.

சமையல் முடிந்த பிறகு மாதுவைக் குளிப்பாட்டப் புறக்கடைக்கு அழைத்துச் செல்லுவதற்குச் சரியாக அந்தக் கிழவன் பக்கத்திலிருந்த கருவேலங் காட்டிலிருந்து ஒரு சுமை சுள்ளியைச் சுமந்துக் கொண்டு வந்தான்.

“எதற்கு இது?” என்று கேட்டேன் நான்.

“சுற்றி வேலி கட்ட” என்று அவன் எனக்குச் சுருக்கமாகப் பதிலளித்து விட்டு, என் பக்கம் முதுகைத் திருப்பிக் கொண்டு, அந்த முட் படர்ந்த கிளைகளைக் கத்தியால் வெட்டி ஒழுங்குப் படுத்தலானான். அவன் தோற்றத்திற்கும் அவன் செய்யும் வேலைகளுக்கும் சம்பந்தமே காணோம். காலம் தனது சின்னங்களைப் பரிபூரணமாகச் சித்திரித்திருந்த அவனது சுருங்கிய மேனிக்கும் அவன் உடலில் குடியிருக்கும் சுறு சுறுப் பிற்கும் எவ்வளவோ தூரம் என்று நான் நினைக்க லானேன். அவனையே உற்று கவனித்தபோது அவன் தேகம் கட்டுமஸ்தாக இருப்பதைக் கண்டேன். அவனது கை, தீர்மையாக, உதறாமல் வேலைகளை நடத்தியது.

இடுப்பு தளராமல் கம்பீரமாக நின்றது. தன் வேலையே கருத்தாக நின்ற கிழவன் நான் அங்கு இருந்ததையே கவனித்ததாகத் தெரியவில்லை. 'ராத்திரி எங்கு தூங்கினானோ?' அவனிடம் ஒரு மரியாதை, அவனது உதாசீனத்தில் ஒரு கோபம், அவன் மீது அனுதாபம், இரக்கம் இவை யெல்லாம் ஒருங்கே தோன்றி என் மனதில் ஆரவாரம் செய்தன. 'நான்-இந்த வீட்டு எஜமானி - ஒரு கேள்வி கேட்டால், ஏதோ பதில் சொல்லி விட்டுத் திரும்பிக் கொள்கிறானே' என்று என் அகந்தை கர்ஜனை செய்தது. 'முன் பின் அறியாத ஒருவன் உன் வேலை பூராவும் தனது கடமையெனச் செய்திருக்கிறானே,' என்று என் உள்ளத்தில் இருக்கும் தெய்வாம்சம் எடுத்துக் காட்டிற்று. அவன் செய்திருந்த ஒவ்வொரு காரியத்திலும் பிரதிபலித்தத் திறமையை எனது பெண்மை ரசித்து வியந்தது.

"ராத்திரி நீ எங்கே படுத்துக் கொண்டாய்?" என்று நான் கேட்டேன்.

என்னைத் திரும்பிப் பார்த்த ராமய்யா அசட்டையாக அங்கே நின்ற வேப்பமரத்தைத் தன் கையிலிருந்த கத்தியால் சுட்டிக் காட்டி விட்டு மீண்டும் தன் வேலையில் முனைந்தான். 'ஐயோ, பாவம், மரத்தடியிலா படுத்துக் கொண்டான்?' என்று என் மனம் பரிதவித்தாலும், அவன் காட்டும் அலட்சிய பாவம் என் கண்களின் முன்னின்று, எனது கோபத்தைத் தூண்டிவிட்டது. நான் பதில் பேசாமல், மாதுவைத் துடைத்து உள்ளே அழைத்துச் சென்றேன். என் கணவர் பேரில் எனக்குக் கோபம் கோபமாக வந்தது. 'தெருவில் போகிறவனைக் கொண்டு வீட்டில் வைத்து, என்னைப் பாடுபடுத்துகிறதும் அல்லாமல், அவன் வேறு என்னை அதிகாரம் செய்வான் போலிருக்கிறதே! அவனை வீட்டை விட்டு அனுப்பி விடும் படிக் கண்டிப்பாகச்

சொல்லி விட வேண்டம்' என்று அவரைத் தேடிக் கொண்டு வாசற் பக்கம் தோட்டத்திற்குச் சென்றேன். நாங்களே எங்களுடைய வேலைகளைச் செய்துகொண்டு, எங்கள் சொந்த வீட்டில், நாங்களே பயிர் செய்த பண்டங்களை உண்டு, மனித சமூகத்தில் இருக்கும் இரைச்சலும், குழப்பமும் கிட்டே நெருங்காத ஓரிடத்தில் அமைதியான வாழ்க்கையை நடத்த வேண்டும் என்பது அவர் கொள்கை. அவ்வாறே இதுவரை நடந்தும் வந்தது.

அவர் தோட்டத்தைக் கொத்தி, புல் பூண்டுகளை எடுத்துப் போட்டுக் கொண்டிருந்தார். "இதோ பாருங்கள்..." என்று நான் ஆரம்பிப்பதற்குள், அந்தக் கிழவன் அங்கே வந்து விட்டான். நேரே அவரிடம் சென்று, "மாலை வரும் போது கொஞ்சம் கயிறும், சில ஆணிகளும் வாங்கி வாருங்கள்" என்று ஆக்ஞாபித்து விட்டு அகன்றான். அவரும் எதற்கு என்று கூடக் கேட்காமல், 'சரி' என்று தலையை ஆட்டினார். சினம் என் உதட்டைக் குலுக்கியது. அவரிடம் நான் சொல்லப் போவது அவர் காதில் எங்கே செல்லப் போகிறது? நல்ல கிழவன்! அவன் என் சுதந்திரத்தையே பறித்துக் கொண்டு போய் விட்டதாகக் கருதி நான் பொறுமினேன்.

* * *

நான் அப்பளம் இட்டுக் கொண்டு உட்கார்ந் திருந்தேன். பின் புறத்தில் ராமய்யா விறகு வெட்டும் சத்தம் காதில் கேட்டுக் கொண்டிருந்தது. அவன் வந்து இரண்டு மாதங்கள் ஆகி விட்டன. வீட்டு மனிதன் போலாகி விட்டான். 'வீட்டு மனிதன்' என்றால் கூடப் பொருத்தமாக இராது. ஏனெனில் அவன் என்னவோ இப்பொழுதும் மாற வில்லை. கேட்பதற்குப் பதில் தவிரப் பேச்சு கிடையாது. முக்கால்வாசி நாள் அவன் இருப்பதே ஞாபகம் வராது.

நமக்கு இரண்டு கைகள் இருக்கின்றன வென்று நமக்குப் பிரத்தியேகமாகக் கவன மிருக்கிறதா; மூக்கு, கண் என்று தனியாக உணருகிறோமா? அதே போல் ராமய்யா எல்லோருக்கும் ஒரு கை அதிகமானது போல் வீட்டில் ஓர் இன்றியமையாத பொருளாக விளங் கினான்.

இனி ஓர் உருண்டையை எடுத்துப் பலகையில் வைத்து நசுக்கினேன். பிறகு எத்தனை பாக்கி இருக்கிறது என்று பார்க்கக் கிண்ணத்தைத் திறந்து நோக்கினேன். நான்கு இருந்தது. 'மாதுவுக்கு ஒன்று, ராமய்யாவுக்கு ஒன்று, எங்களிரண்டு பேருக்கும் இரண்டு' என்று எண்ணியபோது என் மனதில் சிறு ஏக்கம் படிந்தது. வீட்டிற்கு ஒரே குழந்தையாக இருக்கும் எல்லாச் சிறுவர்களைப் போலவே மாதுவும் என் காலையே சுற்றிக் கொண்டு, 'அது என்ன, இது என்ன?' என்று நச்சரித்துக்கொண்டே இருப்பவன், இப்பொழுது- கிழவன் வந்த பிறகு - என் பக்கமே வருவ தில்லை. அது என் மனதிற்குக் கொஞ்சம் என்னவோ போல் தானிருந்தது. அதை சிந்தித்தவாறு அப்பளக் குழவியும் பலகையுமாக எழுந்தவள் மாதுவின் பெரிய சிரிப்பொலியைக் கேட்டு ஆவல் மிகுந்தவளாய் ஜன்னல் வழியாக வெளியே எட்டிப் பார்த்தேன்.

ராமய்யா வேப்ப மரத்தடியில் மல்லாந்து படுத்துக் கொண்டு கதை சொல்லிக் கொண்டிருந்தான் போலும். எனக் காதில் சரியாக விழவில்லை. அவன் வயிற்றின் மேல் தன் முழங்கைகளை ஊன்றிக் கொண்டு மாது கேட்டுக் கொண்டிருந்தான். மாது வயிறு குலுங்கக் குலுங்க சிரிக்கவும், ராமய்யாவும் அதில் கலந்து கொண்டான். குழந்தையின் கண்களில் நீர் சொரிய செக்கச் செவே லென்று ஜ்வலித்தன. வாயிலிருந்து ஜொள்ளு ஒழுகிற்று. அவனை அப்படியே வாரி அணைத்துக் கொள்ள வேண்டும் போலிருந்தது எனக்கு. ஆயினும், அது

நடக்காதென்று என் அந்தராத்மாவுக்குத் தெரியும். இப்பொழுது நான் என் குழந்தையை இழந்து விட்டேன். மாது ராமய்யாவின் தோழனாகி விட்டான். நான் செல்லங் கொடுத்தாலும் அவனுக்கு கௌரவக் குறைவாகப் பட்டிருக்கும்.

★ ★ ★

**ரா**மய்யாவிற்கு உடம்பு சரியாக இல்லை. பாவம் தூங்கிக் கொண்டிருந்தார். நான் அவரை எழுப்ப மனமில்லாமல் பின் புறம் சென்று, மாட்டை அவிழ்த்து வெளியே கட்டி விட்டு, கொட்டிலைக் கழுவி விட்டு, பால் கறக்கச் செம்பு எடுத்து வர உள்ளே சென்றேன். அவர் அபபொழுதும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார். நான் அடிமேல் அடி எடுத்து வைத்துச் சென்று, பாலைக் கறந்து வந்து உள்ளே வைத்தேன்.

இதற்குள் ராமய்யா எழுந்து விட்டார். என் கணவரும், மாதுவும் கூட எழுந்து விட்டார்கள். என் கணவர் தோட்டத்தை நோக்கிச் செல்ல, மாதுவும் பல் துலக்கப் பின் புறம் சென்றான். சிறிது நேரத்திற்கெல்லாம் ராமய்யாவின் குரலும் மாதுவின் குரலும் தினந்தோறும் கூறும் சுலோகங்களில் லயித்து விட்டன. ராமய்யா, வீட்டி லிருந்து சற்று தூரத்தில் ஒருமண் குடிசை போட்டுக் கொண்டிருந்தார். அதில் தான் அவர் மாதுவுக்கு பாடங்கள் கற்பித்தார்.

ராமய்யா இல்லா விட்டால் நான் என்ன செய்திருப் பேனோ? மாதுவின் விளையாட்டுத் தோழன்- குரு; என் வலக்கை; என் கணவரின் ஊன்று கோல்; என்றெல்லாம் நான் அவரைப் பற்றி நினைப்பதுண்டு.

அவர் வந்த நாளிலிருந்து மாது எப்படி வளர்ந்து விட்டான் என்பதை நினைத்தால் எனக்கே ஆச்சரியமாக

இருந்தது. ஒரே குழந்தையானதால் அவனை மிகவும் செல்லமாக வளர்த்திருந்தேன். எதற்கெடுத்தாலும் பிடிவாதம் பிடிப்பான். சாபிடப்படுத்துவான். இப்பொழு தென்னவென்றால், அவன் தன் வேலைகளைத் தானே செய்து கொள்ளுவதும்... ஏன், துணி தோய்க்கக் கூட கற்றுக் கொண்டு விட்டான்!

அன்று மாது தோட்டத்தில் பாத்தி வெட்டி, செடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்தான். எனக்குத் தலை வலியாக இருந்ததால், அவனைப் பார்த்தவாறு சற்று நேரம் வாசலில் உட்கார்ந்திருந்தேன்.

"அம்மா, இன்று நான் படித்துக் கொண்டிருந்த கதை ரொம்ப நன்றாக இருந்தது. விடவே மனசில்லை, அம்மா," என்று என்னைப் பார்த்துக் கூறினான் மாது.

"போய் படிக்கிறது தானே? தண்ணீர் நாளைக்குப் பாய்ச்சிக் கொண்டால் போகிறது" என்றேன் நான்.

"எடுத்த வேலையைக் கொத்தும் குறையுமாக விட்டு விடுவதோ?" என்று அலட்சியமாகப் பதிலுரைத்து விட்டு மாது தன் வேலையில் முனைந்து விட்டான்.

அவன் முகத்தில் என்ன ஏளனம்! என் மனம் துணுக் குற்றது. சமையலறையைக் கழுவாமல் விட்டு விட்டு வந்ததை அவன் சுட்டிக் காட்டினான் போல் தோன்றிற்று. என் வேலையைப் பார்க்க விரைந்து சென்றேன்.

ராமய்யாவின் கருணை மிகுந்த போஷணையில் அவ்வளவு கண்டிப்பு!

* * *

"நீ உள்ளே போ, அம்மா, நான் அலம்புகிறேன்" என்ற ராமய்யாவின் குரலைக் கேட்டு நான் திரும்பினேன்.

"வேண்டாம், மாமா" என்றேன் நாணத்துடன்.

எனக்கு அந்தச் சமயத்தில் அவர் செய்த உதவி ஒரு தாய் கூடச்செய்திருக்க முடியாது. அவர் வேலை ஒன்றை நான் செய்து விட்டால் அதற்கு ஈடு செய்வது போல் என் வேலை இரண்டைத் தானே செய்யும் அவர் அப்பொழுது என்னை ஒரு வேலையும் செய்ய விடமாட்டார். தனக்கு ஒரு நியாயம், எனக்கு ஒரு நியாயம் போலும்.

"விடு- தண்ணீர் தூக்கக் கூடாது. இருட்டில் வெளியே போகாதே. பால் சாப்பிடு, பழம் சாப்பிடு" என்றெல்லாம் அவர் என்னை அதிகாரத்துடன் விரட்டியடித்தது எனக்கே வியப்பாக இருந்தது. ஏன்? எனக்கு மாதம் முதிர்ந்து, என் தாயார் என்னை அழைத்துப் போக வந்ததும், அவளையும் அப்படியே அதட்டினார்!

"ஊருக்குப் போனவுடன் ஒரு தரம் என்ணெய் கொடுங்கள்" என்று ஆக்ஞாபித்தார். அம்மா இப்பொழு தும் அதைச் சொல்லிச் சொல்லி சிரிப்பாள்.

ஊருக்குப் போகும் போது அவரை விட்டு விட்டுப் போக வேண்டுமே என்று கூட எனக்கு இருந்தது. மாதுவை என்னுடன் அனுப்ப வேண்டாம் என்று அவர் என் கணவரிடம் சொல்லி விட்டார்.

"உன் உடம்பையே உனக்குப் பார்த்துக் கொள்ள முடியாது, இவன் வேறு எதற்கு?" என்று தனக்கே மிகவும் தெரிந்தாற் போல் ராமய்யா சொல்லிக் கொடுத்ததை கிளி போல் ஒப்பித்தார் என் புருஷன். நாங்களும் சிரித்துக் கொண்டு கிளம்பி விட்டோம்.

* * *

நான் குழந்தையுடன் திரும்பி வந்த போது முகத்தில் ஒளிவீச வாசலில் நிற்கும் ராமய்யாவின் பழுத்த தோற்றம்

தான் என் கண்ணில் முதல் முதலில் பட்டது. எல்லோரும் இறங்குவதற்கு முன்னேயே நான் வண்டியிலிருந்து இறங்கினேன். ராமய்யா ஆவலுடன் குழந்தையைக் கையில் வாங்கிக் கொண்டார். நான் அவர் காலில் விழுந்து நமஸ்கரித்து; அவரது மனப்பூர்வமான ஆசீர் வாதத்தை பெற்ற பிறகே என் மனதில் அமைதி குடி கொண்டது.

மாதுவின் தங்கை தங்கம் வீட்டிற்கு வந்த பிறகு, ராமய்யாவும் சரி மாதுவும் சரி, அவளை வைத்துக் கொண்டு கொஞ்சுவதிலேயே பாதிக் காலத்தைக் கழித்தனர். முக்கால் பங்கு வேலையும் மீண்டும் என் மேலேயே விழுந்தது. ஆயினும் அவர் ஆனந்தமாக, குழந்தையை வைத்துக் கொண்டு பேசிக் கொஞ்சிக் குலாவும் போது, அவருடைய சந்தோஷத்தைக் கலைக்க எங்களுக்கு மனம் வரவில்லை. நானும் என் கணவரும் பழைய படி வேலையைப் பகிர்ந்து கொண்டு நடத்தி வந்தோம்.

* * *

இப்படியே மகிழ்ச்சி அலைகளின் உச்சத்திலேயே உல்லாசமாக மிதந்து காலங் கழிப்போம் என்று மனக்கோட்டை கட்டிய எனக்கு, ஒரு நாள் காலை ஒரு பேரிடி காத்துக் கொண்டிருந்தது.

விடியற்காலை ஐந்து மணி இருக்கும். மாது வந்து என்னை எழுப்பினான்.

"என்னடா?' என்று கேட்டேன்.

"தாத்தாவுக்கு உடம்பு சரியாக இல்லையாம். உன்னையும் அப்பாவையும் எழுப்பச் சொன்னார்."

விவரிக்க முடியாத பீதி மனதை உலுக்க, நாங்களிரு வரும் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து விரைந் தோம்.

ராமய்யா கட்டு கட்டாக விபூதி அணிந்து முன் பக்கத்து வராந்தாவில் சிவப்பழமென விளங்கினார். மாதுவைக் கண்டதும் அவனை அருகில் அமரும்படிச் செய்து, அவனுக்குத் தெரிந்த தட்சிணாமூர்த்தி அஷ்டகத்தைச் சொல்லச் சொன்னார்.

"என்ன மாமா, மாமா!" என்று நான் பதறியதற்கு அவர் அமைதியாக 'ஒன்றுமில்லை' என்று கையை அமர்த்தி, எங்களையும் கூட உட்கார வைத்தார். குழந்தை தங்கத்தைக் கையிலெடுத்துக் கொஞ்சி விட்டு மாதுவிடம் அவளைக் கொடுத்து, "தொட்டிலில் விட்...டு...ஆட்...டு" என்று கூறினார்.

அவரால் பேசக்கூட முடியவில்லை. முதல் நாள் விறகுகூட வெட்டியிருக்கிறார். என் தொண்டை கரகரத்தது. ஆனால், அவர் எங்கள் துயரத்தைக் கவனித்து, 'வேண்டாம்' என்று சமிக்ஞை காட்டி, புன்னகை பூத்தார். சிரமப்பட்டு மெல்லிய குரலில் பேசினார், அவர் வாயண்டை காதை வைத்துக் கேட்டேன்.

"ஏன் மனங் கலங்குகிறாய்? நான் எல்லோரையும் இழந்து விட்டு பரதேசியாக வழியில் திரிந்து, அநாமதேயமாகச் சாக வேண்டியவன். பிள்ளையும், பெண்ணும், பேரனும், பேத்தியும் என்னைத் தாங்க, நான் செல்வது எவ்வளவு சந்தோஷம் என்று யோசித்துப் பார். உன்னை அன்று பார்த்தவுடனேயே என் பெண்ணின் ஞாபகம் எனக்கு வந்தது. அன்றிலிருந்து நீயே என் குழந்தையாகி விட்டாய்."

மூச்சைப் பிடித்துக் கொண்டு தெளிவாகப் பேசினார் ராமய்யா. என் நாக்கு உள்ளேயே ஒட்டிக் கொண்டது. என் கணவரும் பேசத் தெரியாமல் கண்களில் நீர் தோய, கை கட்டி உட்கார்ந்திருந்தார். ராமய்யாவின் முகத்தில்

ஓர் ஒளி தோன்றிற்று. கண்கள் உருண்டன. கண்டம் களகளத்தது. அப்படியே சாய்ந்து விட்டார்.

☆ ☆ ☆

அதே சூரியாஸ்தமன சமயம். அதே சிற்றாற்றின் கலகலப்பு என் காதுகளில் ராமய்யாவைப் பற்றி எத்தனையோ ரகசியங்கள் கூறுகிறது. எப்படி அமைதியாக எங்கள் வாழ்க்கையில் நுழைந்தாரோ அதே அமைதியுடன் வேறு உலகத்திற்குள்ளும் புகுந்து விட்டார்.

அவர் வந்த புதிதில் அவர் இருந்ததையே மறந்த நான், இப்பொழுது அவர் இங்கு இல்லாததை மறந்து விடுகிறேன். இப்பொழுது மாதுவுடன் தங்கம் விளையாடுகிறாள். ஆனால் அவளுக்கு ராமய்யா தாத்தாவின் போஷணை இல்லாமல் போய்விட்டதே என்பதுதான் எனக்குக் குறை.

(காதம்பரி–1949)

------------